# முன்னுரை

பழைமையாளர்களுக்கு இது கலியுகம், பகுத்தறிவாளர்களுக்கோ இது புது யுகம். இந்தப் புதுயுகம் பூத்ததும் 'அதிசய விளைவு'களை எதிர்பார்த்தான் பாரதி; 'அறிவியல் விளைவு'களை எதிர்பார்த்தான் பாரதிதாசன். இந்த இருவரும் இன்று நம்மிடையே இல்லை; அவர்கள் எதிர்பார்த்த விளைவுகளிலும் இன்று நாம் பெரிதும் ஏமாற்றமே அடைந்திருக்கிறோம்.

சான்றுக்கு ஒன்று போதும். அன்று தொட்டு இன்று வரை 'அரி நமோத்து சித்தம்' என்று ஆரம்பமாகும் பெரிய 'அரிச்சுவடி', பள்ளிக்கூட வசதியில்லாத பட்டிதொட்டிகளில் மட்டுமல்ல, நகரங்களிலும், தெருத் தெருவாக விற்பதும், பகுத்தறிவற்ற பாமர மக்கள் அதை வாங்கித் தம் குழந்தைகளுக்குப் படிக்கக் கொடுத்து, அவற்றை முளைக்கும்போதே முட்டாள்களாக்கி விடுவதும்தான் அது.

தன்னிகரற்ற தன்மானத் தலைவர் தந்தை பெரியார் அவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி அதை ஓரளவேனும் தடுத்து நிறுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன் 'பெரியார் அறிவுச் சுவடி' என்ற இச்சிறு நூலை வெளியிட்டிருக்கிறேன். வசதியுள்ளவர்கள் இதைப் பெருமளவில் விலை கொடுத்து வாங்கி வசதியில்லாதவர்களுக்கு இலவசமாக வழங்கி மகிழ வேண்டுமென்பது என் ஆசை.

இந்நாள் இளந்தமிழர்கள் அந்த ஆசையைத் தங்களால் இயன்ற வரை நிறைவேற்றி வைப்பார்கள் என்ற நம்பிக்கையும் எனக்கு உண்டு. அத்துடன் இதுவரை 'பெரிய அரிச்சுவடி'யை மட்டுமே விற்று வந்த அன்பர்கள், இந்தப் 'பெரியார் அறிவுச் சுவடி'யையும் விற்க முன் வருமாறு வேண்டுகிறேன்.

சூலை 1, 1973
சென்னை – 30

வணக்கம்,
விந்தன்



# விண்வெளிமுட்டும் விந்தன் புகழ்!



தமிழ்நாட்டின் தலைசிறந்த எழுத்தாளர் மட்டுமல்லாமல், முற்போக்குச் சிந்தனையின் முழு உருவமாய்த் திகழ்ந்தவர் புரட்சி எழுத்தாளர் 'விந்தன்' அவர்கள் ஆவார்கள்!

அவரது எழுத்துகள், வெறும் பொழுதுபோக்குக்கானவை அல்ல; பொழுது விடிவதற்கான வித்துகள் ஆகும்! கருத்து முத்துகளாகவும் அவரது சிந்தனைக் கடலிலிருந்து கிடைத்தவைகளாகும்!

பெரியார் அறிவுச் 'சுவடி' என்று அவர் இறுதிக் காலத்தில் எழுதிய குழந்தைகளைச் சிந்திக்கத் தூண்டும் சீரிய இந்நூல் இளைய தலைமுறைக்கு அவரது அருங்கொடை என்றே கூறவேண்டும்.

விந்தன் கையில் பேனா – வீரன் கையில் வாள்; விற்பன்னர் கையில் வியத்தகு கருவி என்றே நடனமாடி எல்லோரையும் மகிழ்விக்கிறது!

பெரியார் பிஞ்சுகளுக்கு நல்ல ஊட்ட மாத்திரை – பகுத்தறிவாளர் குடும்பத்தில் இருக்கவேண்டிய குடும்ப விளக்கு!

இதனைப் பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனத்திற்கு அளித்து வெளியிடச் செய்த விந்தன் அறக்கட்டளை அறங்காவலர்கள் அனைவருக்கும் – குறிப்பாக நிருவாக அறங்காவலர் கோ. ஜனார்த்தனன் ஆகியோருக்கும் நமது பாராட்டும், நன்றியும்!

"வாணன் புகழ்க்கெல்லை வாழ்த்துவோர் நாவெல்லை!"

என்பது பழம் பாடல்!

"விந்தன் புகழ்க்கெல்லை விண்வெளி முட்டும் எல்லை!"

என்பது புதுப்பாடல்!

வாழ்க பெரியார்!

வளர்க விந்தன் புகழ்!!

வருக விந்தன் விரும்பிய புதுச்சமூகம்!!!

22.06.2004
சென்னை–7.

(கி. வீரமணி)

அறிவே துணை!

தமிழ் வாழ,
தமிழன் வாழ,
தமிழ்நாடு வாழத்
தன்மான இயக்கம் கண்ட
தந்தை பெரியார்
வாழ்க!





அகரம் முதல் வகரம் வரை

ஆனஇச் சுவடி தன்னைப் – பகரவே

பைந்தமிழான் துணை வேண்டிப்

பாதமலர் பணிகின்றேன்!

– விந்தன்

அ றிவின் வழியே அறவழி யாகும்

ஆ லயம் தொழுவது சாலவும் தீது

இ றைவன் என்பது இயற்கையே யாகும்

ஈ சன் என்பவன் நீசனே யாவான்

உ ன்னிலும் உயர்ந்தவன் ஒருவனும் இல்லை

ஊ ழ்வினை என்பது உன்னை ஏய்க்கவே

எ ல்லாம் உன் செயல் என்பதை நீ அறி

ஏ ழை என்பவன் கோழையே ஆவான்

ஒ துங்கி நில் என்றால் ஒட்டி நீ நிற்பாய்

ஓ துவோரெல்லாம் உயர்ந்தோர் ஆகார்





க டவுள் என்பது கயவர்கள் கற்பனை

கா சிக்குப் போவது காசுக்கு நட்டமே

கி ளர்ச்சிகள் இன்றி வளர்ச்சிகள் இல்லை

கீ தை உன்னைக் கீழ்மகன் ஆக்கும்

கு ட்டக் குட்டக் குனிபவன் முட்டாள்

கூ டி ஒற்றுமை கொள்கையில் காண்பாய்

கெ ட்டாலும் மானம் விட்டுக் கெடாதே

கே ள்வி ஞானமே கேடிலா ஞானம்

கை ம்பெண்ணாயினும் கட்டு தாலியை

கொ டுப்பவன் எல்லாம்
கொடை வள்ளல் ஆகான்

கோ யில் இல்லா ஊரில் நீ குடி இரு

ச ரித்திரம் அறிந்தவன் சாத்திரம் பேசான்

சா தி ஒழியாமல் சமதர்மம் இல்லை

சி ந்தனைச் செல்வமே சிறந்த செல்வம்

சீ வனை விட்டபின் சிரார்த்தம் எதற்கு?

சு கமென்று எதுவும் சொர்க்கத்தில் இல்லை

'சூ ட்சுமம்' என்பது சூழ்ச்சியே யாகும்

செ த்ததும் விடுவான் மருத்துவன்;
செத்தாலும் விடான் புரோகிதன்

சே க்கிழார் செய்ததே சிவனார் லீலைகள்

சொ ர்க்கம் என்பது சுரண்டி வாழ்வதற்கே

சோ திடம் சொல்வது
சோற்றுக்கு என்று அறி





ப குத்தறிவாளர் பஞ்சாங்கம் பாரார்

பா ம்புக்கு நஞ்சு பல்லில்;

பார்ப்பனனுக்கு நஞ்சு நெஞ்சில்

பி றப்பால் உயர்ந்தவன் – தாழ்ந்தவன் இல்லை

பீ டை என்பது பிராமணீயமே

பு துமையை விரும்பிப் பழைமையை மறப்பாய்

பூ ணூலை அணிந்தவன் புனிதன் ஆகான்

பெ ருமை பெற நில்

பே தமை அகற்று

பொ றுத்தார் ஆளும் பூமி மயானமே

போ ர்த்திறன் போற்றி வாழ்



**ம** னிதனைக் கெடுத்தது மதமெனும் மாயை

**மா** னம் போகும் மக்கள் மிகப் பெறின்

**மி** ச்சம் பிடித்து வாழ்; மீளாக் கடன் இரா

**மீ** சை வைக்க ஆசைகொள் தமிழா!

**மு** க்தியால் வளர்வது மூடத்தனமே

**மூ** ர்க்கனே மேல் முட்டாளைக் காட்டிலும்!

**மெ** ன்மையின் பேரால் பெண்மை

இழந்தது வன்மையே ஆகும்

**மே** ட்டுக் குடியெலாம் மேற்குடி ஆகா

**மொ** ட்டையும் கொட்டையும்

மோட்சத்தைக் காட்டா!

**மோ** ட்சத்தைப் போலொரு மோசடி இல்லை



ய க்ஞும் யாகமும் யாசகம் எடுக்கவே

யா தும் ஊரென வாழ்ந்தது போதும்

யு க்தி என்பது குயுக்தியே யாகும்

யூ கங்களெல்லாம் உண்மைகள் ஆகா






**ர**சாபாசத்துக்கே ராமனும் தருமனும்

'**ரா**வண காவியம்' ரசித்துப் படிப்பாய்

**வ**ம்புக்கு அஞ்சி வறுமையில் வாடேல்

**வா**தம் புரிவதில் வல்லமை பெறுவாய்

**வி**ரக்திக்கு அடிப்படை விதியே யாகும்

**வீ**ழ்ச்சி என்பது வீரனுக்கு இல்லை

**வெ**ற்றி நிச்சயம் விடாமல் முயன்றால்

**வே**தத்தால் வளர்வது விதண்டா வாதமே

**வை**யகம் வாழ வைதீகம் வேண்டாம்.





## சமூக நீதி

சாதியென்றும் சமயமென்றும் சொல்ல வேண்டாம்
சாத்திரத்தை ஒருநாளும் நம்ப வேண்டாம்
விதியென்றும் வினையென்றும் சொல்ல வேண்டாம்
வீணாகக் காலத்தைக் கழிக்க வேண்டாம்
நாளென்றும் கோளென்றும் சொல்ல வேண்டாம்
நல்வாய்ப்பை அதனாலே இழக்க வேண்டாம்
தமிழினத்தின் தன்மானம் காக்க வந்தோன்
தலைவனாம் பெரியாரை வாழ்த்தாய் நெஞ்சே!



கோயிலென்றும் குளமென்றும் போக வேண்டாம்
குழவிக்கல்லை லிங்கமென்று சொல்ல வேண்டாம்
குடங்குடமாய்ப் பாலதனைக் கொட்ட வேண்டாம்
கொட்டியபின் அதை நக்கிக் குடிக்க வேண்டாம்
அர்ச்சனைக்குத் தட்டேந்தி நிற்க வேண்டாம்
அதில் வேறு தட்சணைகள் வைக்க வேண்டாம்
அறிவுக்கு வித்திட்ட அஞ்சா நெஞ்சன்
அருந்தலைவன் பெரியாரை வாழ்த்தாய் நெஞ்சே!





பஞ்சாங்கம் பார்த்தெதையும் செய்ய வேண்டாம்
பார்ப்பனனை அய்யரென்று சொல்ல வேண்டாம்
பாவமென்றும் புண்ணியமென்றும் பார்க்க வேண்டாம்
பரலோகம் செல்லவழி தேட வேண்டாம்
ஏழுஜென்மம் உண்டென்று எண்ண வேண்டாம்
எண்ணியவர் யாருமில்லை நம்ப வேண்டாம்
எத்தர்களின் புரட்டையெல்லாம் எடுத்துரைத்தோன்
எம் தந்தை பெரியாரை வாழ்த்தாய் நெஞ்சே!



திதியென்றும் திவசமென்றும் கொடுக்க வேண்டாம்
தின்பவர்கள் பிதுர்க்களென்று எண்ண வேண்டாம்
கோமாதா குலமாதா ஆக வேண்டாம்
கோமயத்தில் குணநலனைக் காண வேண்டாம்
சாணியையும் பிள்ளையாராய்ச் செய்ய வேண்டாம்
சரணமென்று விழுந்ததனை வணங்க வேண்டாம்
முட்டாள் தனத்தையெல்லாம் முறியடித்தோன்
மூதறிஞன் பெரியாரை வாழ்த்தாய் நெஞ்சே!



மதமென்னும் வெறிபிடித்து அலைய வேண்டாம்
மல்லுக்கு அதற்காக நிற்க வேண்டாம்
சிந்திக்கும் முன்எதையும் செய்ய வேண்டாம்
செய்தபின் சிந்தித்து வருந்த வேண்டாம்
பதினெட்டுப் புராணத்தைப் படிக்க வேண்டாம்
படித்துவிட்டுப் பகுத்தறிவை இழக்க வேண்டாம்
'எம்மதமும் சம்மதமே' என்ற மேலோன்
ஏறொத்த பெரியாரை வாழ்த்தாய் நெஞ்சே!

# பெரியார் சொல் கேள்

பகுத்தறிவு என்பது மனிதனுக்கு ஜீவநாடி – உயிர்நாடி ஆகும். ஜீவராசிகளில் மனிதனுக்குத்தான் பகுத்தறிவு உண்டு. இதில் மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு தாழ்ந்த நிலையில் இருக்கின்றானோ, அவ்வளவுக்கவ்வளவு காட்டுமிராண்டி என்பது பொருள்.

மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு பகுத்தறிவில் தெளிவு பெறுகின்றானோ அவ்வளவுக்கவ்வளவு பக்குவமானவன் என்பது பொருள்.

பகுத்தறிவு பெறும்படியான சாதனம், நமக்கு நீண்ட நாளாகவே தடைப்படுத்தப்பட்டு வந்துள்ளது. நம்மை அடிமைப்படுத்தி ஆதிக்கம் செலுத்திய பார்ப்பனர்கள் நாம் பகுத்தறிவு வளர்ச்சி அடைய ஒட்டாமல் தடை செய்துகொண்டே வந்துள்ளார்கள்.

## தடைக்கற்கள்

மக்களிடையே பகுத்தறிவைத் தடைப்படுத்த கடவுள், மதம் சாஸ்திரம் முதலியவைகளைப் புகுத்தி நம்பும்படிச் செய்துவிட்டார்கள்.





பொதுவாகக் கடவுளைப் புகுத்தியவன், கடவுள் பக்திக்கு முதல் நிபந்தனையாகக் கடவுள் பற்றிச் சிந்திக்கக் கூடாது என்ற நிபந்தனையுடன்தான் ஏற்படுத்தினான்.

கடவுள் பஞ்சேந்திரியங்களுக்கும் எட்டமுடியாத வஸ்து, அறிவுக்கு எட்டமுடியாத வஸ்து. பஞ்சேந்திரியம் என்றால் மெய், வாய், கண், மூக்கு, செவி இந்த அய்ந்துக்கும் கடவுள் எட்டமாட்டார்; இந்த அய்ந்தும் கொண்டு கடவுளைத் தேடவும் கூடாது என்பதாகும்.

இந்த இந்திரியங்களை எல்லாம் மீறிச் சிந்திக்க மனது என்று ஒன்று உள்ளது. இந்த மனதுக்கும் எட்டாதவர் கடவுள் என்று இத்தனை நிபந்தனைகளையும் போட்டுக் கடவுளைச் சொன்னான்.

கடவுள் என்றால் அப்படியே ஒத்துக்கொள்ள வேண்டும்; எங்கே–ஏன்–எப்படி என்று கேட்கக்கூடாது என்று கூறிவிட்டார்கள்.

கடவுள் போலவே மதத்தைப் பற்றியும் என்ன என்று சிந்திக்கக் கூடாது; மதம் எப்போது ஏற்பட்டது–யாரால் ஏற்பட்டது

– என்ன ஆதாரம் என்று சிந்திக்கக்கூடாது; சிந்தித்தால் மதம் போய்விடும். எனவே, அப்படியே ஒத்துக்கொள்ள வேண்டும் என்று கூறிவிட்டார்கள்.

**சாஸ்திரம்**

கடவுள், மதம் போலவே சாஸ்திரத்தைப் பற்றியும் ஆராயக்கூடாது; எவன் பகுத்தறிவு கொண்டு சாஸ்திரங்களை ஆராய்கின்றானோ அவன் நரகத்திற்குப் போவான் என்றும் எழுதி வைத்துள்ளார்கள்.

எனவே, பகுத்தறிவு என்பது ஆதாரத்தைக் கொண்டு தெளிவடைவது – மூடநம்பிக்கை என்பது ஆராயாமல் ஏற்றுக்கொள்வது ஆகும்.

நமது இழிநிலை, முட்டாள்தனம் மாறவேண்டுமானால், நாம் ஒன்றும் கஷ்டப்பட வேண்டியதில்லை. பகுத்தறிவினைக் கொண்டு தாராளமாகப் பலதடவை நன்கு சிந்தித்தால் ஒவ்வொன்றும் தானாகவே நழுவி விடும்.





# புத்துலகத் தொலை முன்னோக்காளர்

## தந்தை பெரியார் பற்றிப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்

### தமிழ்நாடு எதிர்பார்க்கும் தலைவர்!

ஆயிரம் ஆண்டெனும் மூதாட்டியவள்
அவர் அறிந்திராத அறிவாவார்
அணிந்திராத அணியாவார்!
கணந்தோறும் இப்பெரிய தமிழ்நாடு
எதிர்பார்க்கும் தலைவராவார்
கழறவோ **அவர் பெயர்தான் இராமசாமி!**



### அவர்தாம் பெரியார் - பார்!

தொண்டு செய்து பழுத்த பழம்;
தூய தாடி மார்பில் விழும்;
மண்டைச் சுரப்பை உலகு தொழும்;
மனக் குகையில் சிறுத்தை எழும்!
**அவர்தாம் பெரியார்!**



ஆலயம் தொழுவது சாலவும் தீது
கீதை உன்னைக் கீழ்மகன் ஆக்கும்
கோயில் இல்லா ஊரில் நீ குடி இரு
சாதி ஒழியாமல் சமதர்மம் இல்லை
தன்மானம் இலாதவன் தமிழன் ஆகான்
தொட்டால் தீட்டெனில் தொடாமல் விடாதே
நயம்பட உரைப்பவுன் நயவஞ் சகனே
மோட்சத்தைப் போலொரு மோசடி இல்லை
'ராவண காவியம்' ரசித்துப் படிப்பாய்
வையகம் வாழ வைதீகம் வேண்டாம்.